# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - ஐப்பசி - 2016 - அக்டோபர்




52

07.10.2016 அன்று நடைபெற்ற நிறுவனர் நாள் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - ஐப்பசி - 2016 - அக்டோபர் இதழ் - 52

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்

1. ஆசியுரை 2
2. சித்த ஞானம் 3
3. திருவிளையாடல் புராணம் 6
4. பட்டினத்தார் பைந்தமிழ் 13
5. அதிமதுரக் கவிகள் 18
6. மடாலய நிகழ்வுகள் 22
7. திருக்குறள் 25

தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

சேவேந்து கொடியானைச் சேர்ந்தாள் தன்னைச்
செங்கமலப் போதொத்த செல்வி யாளை
சிறுவண்டு தென்பாடித் திரியப் பூக்கள்
செங்குமுதம் கமலமொடு சேர்ந்து நிற்கப்
பாவேந்து தமிழ்ப்புலவோர் பாடல் மாந்தும்
பச்சைமயில் பரமேட்டி பவள வாயாள்
பனிபடர்ந்த மலையிருப்பாள் குயில்கள் பாடிப்
பறந்துதிரி வன்னிவனம் பாது காக்கும்
பூவேந்து குழல்மாது புருவ வில்லாள்
புன்னகையாள் தவளநிறப் பொருப்பின் மேலாள்
புரிகுழலாள் வரிவிழியாள் பூத நாதன்
போற்றுதிரு மனையாட்டி கழனி வாசல்
காவேந்து வன்னிவனம் காக்கும் நெல்லை
கால்வணங்கி மாலகற்றி மங்கை முன்னர்க்
கைகுவித்தார் தம்வாழ்வு கனிய வைப்பாள்
கண்ணுதலான் தன்துணையைக் கருத லாமே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

உடல் உபாதைகள் காரணமாக ஏறக்குறைய 4 மாதங்கள் உங்களுடன் தொடர்பு இல்லாமல் இருந்துள்ளேன். உடல் நலக்குறைவின் வீரியம் அதிகம் இருந்தகாரணத்தால் இயல்பான செயல்பாடுகளில் ஈடுபடமுடியாமல் போனது.

இருதயநரம்புகளில் இருந்த 3 அடைப்புகளை நீக்கி, கசிந்து கொண்டு இருந்த இதய வால்வுகளைநீக்கி, இருதய அறுவைச் சிகிச்சை ஜீன் 13ஆம் தேதி நடந்தது. இந்த அறுவைச் சிகிச்சைக்குப் பின்னர் எனக்குக் கடந்த 4 மாதங்களாகப் பலதரப்பட்ட அனுபவங்களை முதன் முதலாகச் சந்தித்து இருக்கிறேன்.

வாழ்க்கையிலே முதன் முதலாகத் தொடர்ந்து 25 நாட்கள் மருத்துவமனையிலே இருந்தது முதல் அனுபவம். அறுவைச் சிகிச்சை நடந்து ஏறக்குறைய 15 நாட்கள் கைக்குழந்தை போல் செயலிழந்து அடுத்தவரைநம்பியே இருந்தது மற்றொரு அனுபவம். ஏறக்குறைய 40 நாட்கள் புத்தகங்கள், நாளிதழ்கள் படிக்காமலே கடத்தியது மற்றொரு புதிய அனுபவம். மலக்கசிவின் காரணமாக வயது வந்தவர்களுக்கான டயாப்பர் அணிந்து இருந்ததும் மிகமிகப் புதிய அனுபவம். மேலும் சிறுசிறு புதிய அனுபவங்களைச் சந்தித்துள்ளேன்.

மேற்கூறிய புதிய அனுபவங்களாலே என்னுடைய பழக்கவழக்கங்களில் பலமாறுதல்களை நான் உணர்கிறேன். அடுத்தவரைச்சாராமல் வாழமுடியும் என்ற அகங்காரம் அடியோடு அழிந்து பணிவு ஏற்பட்டது. கிடைக்கின்ற நேரத்தை முறையாகப் பயன்படுத்தச் சிறிது சிறிதாகக் கற்றுக் கொண்டு வருகிறேன். மனவேகமும் சிந்தனைவேகமும் குறைந்துமன அமைதி ஓரளவிற்குச் சிந்தித்து இருக்கிறது.எனவே துயரங்களிடையே நம்முடையபண்புகள் நெறிப்படவும் உள்ளம் உறுதிப்படவும் வாய்ப்பாக அமைவதாலே கெடுதலிலும் நன்மை பிறக்கும் என்ற உண்மையை உணர்கின்றேன்.

உடல் நோய்கள் வருகின்ற காலத்தில் இறைநம்பிக்கையும் பக்தியும் பெருகுவதையும் அறிகின்றேன். சிகிச்சை அளித்த மருத்துவர்கள் என்னுடைய அடிப்படை இறைநம்பிக்கையினால் தான் நான் நோய்களிலிருந்து மீண்டுவந்தேன் என்று அபிப்பிராயப்படுகிறார்கள்.

அதனால் நமக்கு ஏற்படுகின்ற அனுபவங்களை நம்மை வளர்த்துக் கொள்வதற்கு உரிய சாதனங்களாக மாற்றிக் கொள்வதுநம் கையில் தான் இருக்கிறது. மேற்கூறிய சூழ்நிலையிலே நம்பிக்கை இழந்து ஆழ்ந்த மனஉளைச்சலிலே சிக்கிக்கொள்பவர்களைப் பற்றியும் நான் அறிவேன். எனவே நமக்கு ஏற்படுகின்ற அனுபவங்கள் எதுவாக இருந்தாலும் நம்மை உறுதிப்படுத்தவே தோன்றுகின்றன. யாவும் நன்மைக்கே என்னும் ஆழ்ந்த நம்பிக்கையோடு இந்த ஆசியுரையை எழுதுகிறேன்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

**(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)**

அடுத்து எந்தப் பதியையும் குறிக்காமல் பொதுவாகக் குறித்துப் பாடுகிறார். மீண்டும் மீண்டும் பிறவியை வெறுத்தே பாடும் போக்கே இவர் பாடல்களில் காணப்பெறும். சித்தர்கள் அனைவரும் இதற்கு விதி விலக்கல்லர்.

வானத்திலே தோன்றுகின்ற பிறை நிலவின் வடக்கு முனை உயர்ந்திருந்தால் நாட்டின் வளமுயரும் என்றும் தென்முனை சாய்ந்திருந்தால் நாட்டின் வளம் குறையும் என்றும் சொல்வது வழக்கு. பாமர மக்கள் சந்திரப்பிறை வடக்கே உயர்ந்தால் வயலெல்லாம் நெல்லு என்றும் தெற்கே உயர்ந்தால் தெருவெல்லாம் பொட்டி என்றும் சொல்வதுண்டு. பட்டினத்தாரும் அதைக் கூறி அவ்வாறானால் எமக்கென்ன வரப் போகின்றது. உடுத்தும் உடையோ கோவணம்; வீட்டுக்கு வெளியில் உள்ள திண்ணைகளே நாம் துயிலும் இடமாகும். காய் பழம் இலை ஆகியன நமக்கு உணவாகின்றன. குடிப்பதற்குத் தண்ணீர் உண்டு. துணைக்குக் காளையை ஊர்தியாகக் கொண்ட சிவபெருமான் இருக்கின்றார். அவருடைய திருநாமத்தைச் சொன்னாலே போதும். அப்படியிருக்க நமக்கு இந்த உலகத்தில் என்ன கவலை உள்ளது? இறைவனின் ஐந்தெழுத்தில் அவ்வளவு நம்பிக்கை.

***உடைகோவணம் உண்டு உறங்கப் புறத்திண்ணை உண்டு***
***உணவிங்கு***
***அடைகாய் இலை உண்டு அருந்தத் தண்ணீர் உண்டு***
***அருந்துணைக்கே***

*விடைஏறும் ஈசர்திரு நாமம் உண்டு இந்த மேதினியில்*
*வடகோடு உயர்ந்து என்ன? தென்கோடு சாய்ந்தென்ன?*
*வான்பிறைக்கே!*

இந்தப் பாடல் கவலை கொண்ட மானிடன் தன்னுடைய நெஞ்சினுக்குச் சொல்வதாக அமைந்துள்ளது. இறைவன் ஊர்த்துவ தாண்டவம் ஆடிய திருவாலங்காடே நம்முடைய வீடாகும். நமக்கு என்றும் வற்றாத பாத்திரமாக இருந்து உணவுதரக் கையிலே சிவபெருமான் தந்த திருவோடு உள்ளது. நாம் கேட்பதை எல்லாம் தர வளமிக்க நாடும் உள்ளது. எனவே நமக்கு இணையாக அதாவது ஈடாகச் சொல்ல ஒன்றுமே இல்லை.

*வீடு நமக்குத் திருவாலங்காடு விமலர் தந்த*
*ஓடு நமக்கு உண்டு வற்றாத பாத்திரம் ஓங்கு செல்வ*
*நாடு நமக்கு உண்டு கேட்பதுஎல் லாம்தர நன்னெஞ்சமே*
*ஈடு நமக்குச் சொல்லவோ? ஒருவரும் இல்லையே.*

பொதுவாக நெஞ்சை நோக்கிக் கூறுவதாகவே இப்பாடல் அமைகின்றது. இறைவன்மேல் விருப்பம் கொண்டு அவரை நாடுகின்றாய் இல்லை நல்நெஞ்சமே! சிவபெருமான் அடியாரைத் தேடி அவர்கட்குக் கொடுக்காத தன்மையுடன் உள்ளாய். என்னை மாயை பற்றிக் கொண்டது என்றும் காமம் முதலான ஆயுதங்கள் என்னைச் சாடின என்றும் வருந்துவாயோ? அப்படி எனில் உன்னைப் போலப் பித்தர்கள் இவ்வுலகில் இல்லை.

*நாடிக்கொண்டு ஈசரை நாட்டம் உற்றாய்இலை நாதர்அடி*
*தேடிக்கொண்டு ஈகை தெளிந்தாய் இல்லை வெம்மாயை வந்து*
*மூடிக்கொண்டோம் என்றும் காமாயுதங்கள் முனிந்த என்றும்*
*பீடிப்பையோ நெஞ்சே உனைப்போல இலை பித்தர்களே!*

அடுத்த செய்தியாக வழிபாடு செய்கின்ற வகையைச் செப்புகின்ற பாடலைப் பாடுகிறார் பட்டினத்தார். வழிபாட்டில் இருவகை உண்டு. அவை அகவழிபாடு புறவழிபாடு எனப்படும். அகவழிபாடு என்பது மனத்துக்குள்ளே இறைவனை இருத்தித் தியானிப்பது. இதைத்தான் சான்றோர் யோகநிட்டை என்பர். தீபம், புகை, படையல் (நிவேத்தியம்) என்ற முறையில் அனைவரும் காணும்படி செய்வது புறவழிபாடு.

இறைவனுடன் தனியே இடையில் யாருமின்றித் தன்னுடைய வேண்டுதலை இறைவன்பால் எடுத்தோதித் தனிமையில் அதாவது ஏகாந்தமாக இருந்து வழிபடும் முறை. இதைத்தான் அருணகிரிநாதர் முருகனிடம் நீயும் நானுமாய் ஏகபோகமாய் இருக்க வேண்டும் என்று குறிப்பிடுவார். அப்படி வழிபடுங்கால் மனம் ஒன்றி வேறு புறச்சிந்தனைகள் இன்றி வணங்குவது சிறப்பிற்குரியது. ஆனால் நான் எப்படி வழிபடுகிறேன். இப்படிப்பட்ட வழிபாட்டை இறைவா! நீ மனமுவந்து ஏற்றுக் கொள்வாயா? மாட்டாய் அல்லவா? என்ற பொருள்படும்படி பாடுகிறார். அப்பாடல்

***கைஒன்று விழியொன்று நாடக் கருத்துஒன்று எண்ணப்***
***பொய்ஒன்று வஞ்சகம் நாஒன்று பேசப் புலால்கமழும்***
***மெய்ஒன்று சாரச் செவிஒன்று கேட்க விரும்பும்யான்***
***செய்கின்ற பூசை எவ்வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே!***

வழிபாடு செய்யும்போது கைகள் வேறு ஒன்றைச் செய்கின்றன. கண்கள் இறைவனை நோக்காமல் புறக்காட்சிகளைக் காண்கின்றன.பொய்யும் வஞ்சனையும் கலந்த பேச்சினை வாய் பேசுகின்றது. புறத்தே உள்ளவர் பேசும் பேச்சுகளைச் செவிகள் கேட்கின்றன. இவற்றை எல்லாம் விரும்புகின்ற பூசையை எவ்வாறு ஏற்றுக் கொள்வாய் என்று கேட்கிறார். வினைதீர்த்தவனே என்று வேண்டுவதால் தான் செய்யும் இந்தத் தீ வினையும் கடவுள் மாற்றி ஏற்றுக் கொள்வான் என்ற நம்பிக்கையில் இப்பாடலை ஓதுகின்றார்.

இறைவன் நம்மை மானிட வடிவில் ஏன் படைத்தான்? மானிடப் பிறவி மிக அரிதான பிறவி; ஒன்று முதலாக ஐந்தறிவுடன் பிறக்கின்ற உயிரிகள் பலவுள. ஆனால் மானிடப் பிறவிக்கு ஆறாவது அறிவு என்ற ஒன்றைக் கூடுதலாக இறைவன் படைத்துள்ளான். நல்லது எது? கெட்டது எது? என்று அறியக் கூடியநிலையில் படைத்துள்ளான். வேண்டுவதைக் கேட்கவும் வேண்டாததைச் சொல்லவும் வாயைப் படைத்து உள்ளான். கண்களைப் படைத்த காரணம் இறைவனின் திருவுருவைக் கண்டுகளிக்கத்தான். அப்படிக் காணும் கருத்து கண்களுக்கு இருக்கின்றது. மனங்கசிந்து உருகிப்பாடி வழிபடவாயும் பண்நிறைந்த பாடல்களும் உள்ளன. அவற்றைக் கேட்பதற்குச் செவிகளையும் படைத்துள்ளான். எண்ணற்ற இனிய பச்சிலைகளால் (பொதுவாக இங்கே வில்வம்) வழிபட எண்ணமுண்டு. இவற்றை

ஏற்றுக்கொள்ள இறைவனும் எதிர்நிற்கிறான். ஆனால் இந்த உறுப்புக்கள் அனைத்தும் இவற்றைச் செய்யாமல் மண்ணுண்டு போக விடலாமா? ஆனால் இந்தமானுடம் மேற்சொல்லியவாறு செய்யாது கெடுகின்றதே என்று தன்னையும் உட்படுத்திக் கொண்டு பட்டினத்தார் பாடுகிறார்.

இவற்றை அப்பர் சுவாமிகள் தாம் பாடியருளிய அங்கமாலையில் பாடுகின்றார் - தலையே நீ வணங்காய் தலைமாலை தலைக்கணிந்து பலி தேறும் தலைவனைத் தலையே நீ வணங்காய் என்று பாடுவதையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

*கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்*
*பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப்பல் பச்சிலையால்*
*எண்ணுண்டு சாத்த எதிர்நிற்க ஈசன் இருக்கையிலே*
*மண்ணுண்டு போகுதை யோகெடுவீர் இந்த மாநிலத்தே*

அனைத்துமாயிருப்பவன் ஆண்டவன். அவன் இல்லாத இடமே இல்லை. நாம் சொல்லும் சொல்லாக இருப்பவன் அவனே. சொல்லின் முடிவும் அவனே. வேதங்களின் சொல்லும் அவனே. அவற்றின் பொருளும் அவனே. மாசற்ற வானமாக இருப்பவனும் அவனே. இதனை ஆய்ந்தார் இல்லத்திலும் அவ்வாறு ஆராய்ந்தறிந்தார் உள்ளத்திலும் இருக்கின்றவன். கல்லினால் செம்பினால் ஆகிய சிலைகளிலா இருப்பான் என்ற கேள்வியை எழுப்புகின்றார் பட்டினத்தார்.

*(தொடரும்....)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## தடாதகை திருமணம்

திகிரிக் கதிரவன் துன்ப இருளைப் போக்கியது. வெண்குடைத் திங்கள் தண்ணிழல் தந்தது. உலகீன்ற அன்னை உமாதேவியார் கன்னிப் பெண்ணாக இருந்து மனுதர்மசாஸ்திர வழி தவறாது தனி யரசாட்சி செய்து வந்து காலத்திலே மணப்பருவம் வந்து கூடியது. மணம் பெறவேண்டிய வயது வந்து முதிர்ந்து நிற்பதைக் கண்ட தாய் காஞ்சனமாலை பிராட்டியாரை நோக்கி உனக்கு இன்னும் திருமணம் ஆகவில்லையே என்று சொல்லி வருந்தினாள். அது கேட்ட தடாதகைப் பிராட்டியார், அன்னையே கவலை வேண்டாம். உரிய காலம் வந்ததும் மணம் பெறுவேன். பலபடியாக எண்ணி வருந்தவேண்டாம். அஷ்ட திக்குகளிலும், இந்தப் பூலோகம் முழுவதும் சென்று நான் வெற்றிக் கொடி நாட்டி வருவேன், என்று மறுமொழி இயம்பி விரைந்து புறப்பட்டார்.

தடாதகைப் பிராட்டியாரின் கருத்தை அறிந்த அரசர்களும், மந்திரிகளும், ஏனையோர்களும் வந்து சேர்ந்தனர். சங்குகள் முழங்கத் தேரின்மீது ஆரோகணித்தார் பிராட்டியார். பலவகை வாத்தியங்கள் கோஷம் செய்தன. இடதுசாரி வலதுசாரியாச் சுழலவல்ல பெரிய வலிய போர்ப்படைகள் அதிர்ந்து சென்றன. சிறு மலைக் கூட்டம் போல யானைப் படைகள் சென்றன. கடல் அலைகளை நிகர்த்து வரிசையாகக் குதிரைப் படைகள் சென்றன. கூற்றுவனையும் எதிர்த்து வெல்லும் காலாட் படைகளும் பல்வேறு ஆயுதங்கள் தாங்கிச் சென்றனர். இவ்வாறாக. சதுரங்கசைனியமானது பெரு முழக்கத்தோடு மதுரைமா நகரிலிருந்து கிளம்பிச் சென்றது. பெரியதொரு சேனா சமுத்திரமே தரைமீது நடந்தது போலிருந்தது.

மங்கல கோஷம் முழங்கிக் கொண்டே இருக்கத் தேவியாரின் மணித்தேர் விரைந்து சென்றுகொண்டிருந்தது. மீனக்கொடி, புலிக்கொடி, விற்கொடி, மயிற்பீலிக் குடைகள் எல்லாம் பிராட்டியார் தேரின் அருகில் சென்றன. முதலமைச்சன் சுமதி, தேவியாரின் திருவுள்ளக் குறிப்பை உணர்ந்து நால்வகைப் படைகளையும் சேவகம் செய்து சென்றான். அளவில் அடங்காத சதுரங்க சேனைகளுடன் பூவுலகமட்டு மின்றித் தேவலோகம் முதலிய உலகங்களிலும் பிற இடங்களிலும் செல்லுமாறு பணித்து, தடாதகை தேவியார் மன்னர்கள் ஐசுவரியங்கள் அனைத்தையும் கொள்ளை கொளச் செல்வார் ஆயினர்.

வடபுலத்து மன்னர்களான கஜபதி, துரகபதி, சுரபதி என்ற மூவேந்தரையும் வென்று அவர்களது யானைகளையும், குதிரைகளையும் காலாட்படையினரையும் திறையாகப் பெற்றார் பிராட்டியார். பின்னர் தேவலோகம் சென்று இந்திரன் படையை எதிர்த்துப் போர் தொடங்கும் முன்னரே இந்திரன் ஆற்றல் அழிவு பெற அமர்க்களத்திலிருந்து ஓட்டம் பிடித்தான். பிராட்டியார் தேவமாதர்களையும் ஐராவதம் என்ற வெள்ளை யானையையும் உச்சை சிரவஸ் என்னும் வெண் குதிரையையும், காமதேனுவையும் சிந்தாமணியையும் கற்பகம் முதலிய தேவ தருக்களையும் கவர்ந்து கொண்டு திரும்பினார். இப்படியாகவே ஏனைய திக்பாலர்களோடு எதிர்த்துப் போரிட்டு வென்று அவர்கள் பணிந்து கொடுத்த திறைப் பொருள்களை ஏற்றுக்கொண்டார். பின்னர் வெற்றி முழக்கத்தோடு கைலாசமலையை அடைந்தார்.

தடாதகைப் பிராட்டியாரின் படைவீரர்கள் ஆரவாரம் செய்துகொண்டு முன்னேறித் திருக்கயிலாய மலையினைச் சூழ்ந்துகொண்டனர். அதனைப் பார்த்தகயிலைமலைக் காவலர்கள் ஓடோடியும் சென்று நந்தி கேசுவரரிடம் வணங்கி விண்ணப்பித்தனர். சிவபெருமானது திருவுள்ளக் குறிப்பினை உணர்ந்த நந்தீசர் பூதகணங்களை ஏவினார். பூதகணங்களுக்கும் பிராட்டியார் பெருஞ்சேனைக்கு மிடையே கடும்போர் நடந்தது. கடலோடு கடல் எதிர்த்ததுபோலவும், மலையோடு மலை மோதியது போலவும் கோரமான பெருஞ் சமர் விளைந்தது. தேவரின் படைவீரர் எறிந்த ஆயுதங்களையெல்லாம் தடாதகை தேவியார் தனது வச்சிராயுதத்தால் தகர்த்தெறிந்தார். சிவகணங்கள் வலிமை இழந்தவர்களாகிப் புறமுதுகு காட்டி ஓடினர். பராசக்தியினது ஆற்றல் தான் என்னே ! யாரே எடுத்துரைக்க வல்லார்?

ஆயுதங்களும் வாகனங்களும் அழிந்து ஆற்றல் அழிந்து ஓய்ந்து சோர்ந்து வருகின்ற தனது இனத்தவரின் நிலைமையைக் கண்ட நந்திகேசுவரர் இரக்கமும் வருத்தமும் கவலையும் கொண்டார். தம் தலைவரும் கைலாசபதியுமான சிவபெருமானை அண்டி அவரது திருவடிகளை வணங்கி நேர்ந்த அனைத்தையும் விண்ணப்பித்துக் கொண்டார். சிவபெருமான் புன்னகை செய்தருளினார். பின்னர் ஆயுதங்கள் ஏற்று ரிஷபவாகனத்தேறிச் செருக்களம் சென்றார். அங்கு சென்று சிவகணங்களை அஞ்சியோடச் செய்து எவர் எதிர்த்தாலும் வெல்வேன் என்று முழக்கும் வீரசௌந்தரியப் பெண் சிங்கமாம் தடாதகை தேவியைக் கண்டார். அம்மையார் திருஉருவத்தையும் வீரச் செயல்களையும் நேரிலே கண்டு மகிழ்ந்தருளினார். தடாதகைப் பிராட்டியாரும் பல்வகைக் கோலங்காட்டி நின்ற பாம்பலங்காரப் பெருமானை, பெருங் கருணைத் தடங்கடலான சிவபெருமானை நேருக்குநேர் கண்டார். இசைந்த ஏறும், கலியுரிப் போர்வையும், எழில் நீறும், இலங்குநூலும், புலியதள் ஆடையும் பொருந்திய பொன்னார் மேனியன் அருள் கனிந்தான். அருள்நோக்குப் பாய்ந்த அளவிலே அம்மையாரின் மூன்றாவதான நடுத்தனம் மறைந்து விட்டது. பிராட்டியாரின் உள்ளத்திலே அச்சம், நாணம், மடம் முதலிய பெண்மைக் குணங்கள் மேலோங்கி நின்றன. தாழ்ந்த பூங்கொடியைப் போல் தலையைக் குனிந்து கொண்டு தரையைப் பார்த்து நின்றார் தேவியார். வரும் பொருள் உணரவல்ல முதன்மந்திரி சுமதி அசரீரி அன்று

இயம்பிய மணிவாசகங்களை உள்ளத்தே கொண்டான். அம்மையாரை, வணங்கி பேரரசியாரே ! கொன்றை மாலை அணிந்த, அதிசுந்தரரான இச்சிவபெருமானே தங்கள் மணவாளன் என்று கூறினான். தடாதகைப் பிராட்டியார் பேரன்பு பெருக அமைதியோடு நின்றார்.

இது கண்டு உவகையுற்ற தேவ தேவனான சிவ பெருமான் கருணை குழைய, திக்கு விஜயத்தின் பொருட்டு எப்பொழுது நீ புறப்பட்டாயோ, அப்போதிருந்து யாமும் உன்னைப் பிரியாது தொடர்ந்தே வந்தோம். வேதங்கள் இயம்பியபடிக்கு அடுத்து வருகின்ற சோமவாரத்திலே, சுபமுகூர்த்தத்திலே, உன்னைத் திருமணம் புரிந்து கொள்ள வருவோம். நீ மதுரை செல்வாயாக என்று திருவாய் மலர்ந்தருளினார்.

திங்கட்குல விளக்கனைய தடாதகைப் பிராட்டியார் தலைவரிடத்தே தன் பக்தியையும் ஆவியையும் ஒருங்கு வைத்துத் தனது மதுரையம்பதியை வந்தடைந்தார். அஷ்டமங்கலம் தாங்கிய குலமாதர் எதிர்கொண்டழைக்கத் தமது செல்வத் திருமாளிகைக்கு எழுந்தருளினார்.

அமைச்சர்கள் திருமண ஓலை எழுதி எல்லா நாடுகளுக்கும் அனுப்பிவைத்தனர். மதுரை மாநகரம் எங்கும் மணமுரசு முழங்கியது. இயற்கை அழகும் வலிமையும் கொண்ட மதுரைப் பெருவூர் மிகுந்த எழிலுடன் தோன்றிப் பல்வகைக் கோலங் காட்டிப் பொலிந்தது. பட்டாபிஷேக விழாவன்று திகழ்ந்த பாங்கில் பன்மடங்கு திகழ்ந்து நின்றது மதுரை மூதூர். தெருக்களிலே மலர்களோடு குளிர்ந்த பன்னீரைக் கலந்து தெளித்தனர் நகர மாந்தர். வாசனைப் பொடிகளை வாரி இறைத்தனர். பாவை விளக்குகளை நிற்க வைத்தனர். பசிய மலர்கள் பந்தல்களினின்று தொங்கின. மாணிக்க மரகத மாலைகள் நிறைபடத் தொங்கி ஒளி கூட்டின. மங்கல தீபங்கள் வீடுகளெங்கும் சுடர்விட்டன. கங்கை, காவிரி, யமுனை, சரசுவதி ஆகிய புண்ணியப் பேராறுகளின் புனிதநீர் கொணரப் பெற்றன. திருமண வூராம் மதுரை திருமங்கலவூராகத் திகழ்ந்தது.

திருமண மண்டபம் திவ்யமாக அமைக்கப்பட்டது. பளிங்கினால் செய்த யானைகள் மண்டபத்து முன்வாசலில் இருபாலும் நின்றன. படிகள் பொன்னால் அமைந்தன. நீலமணியாளிகள் பத்திகட்டி நின்றன. திண்ணைகளில் மணிகள் பதிக்கப்பெற்றிருந்தன. பளிங்குக் கற்களாலாகிய சுவர்களுக்கிடையே மரகதத்தாலாகிய சாளரங்கள்

விளங்கின. பவளத் தூண்கள் ஆயிரம் நின்றன. மேலே இந்திர நீலமணிகளால் செய்த பொதிகைகள் இருந்தன. பொன்னால் செய்த உத்தரங்கள், செம்மணி விட்டங்கள் துலங்கின. மேனிலை சந்திர காந்தக் கல்லால் செய்யப்பட்டிருந்தது. எங்கும் இன்பத் திருமணம் எழுந்து வீசியது.

திருமண மண்டபத்தின் நடுவிலே கற்பகத்தரு கொடுத்த வயிரச் சிங்காதனத்தின்மேல் பொற்பலகை அமைத்தனர். அதற்குமேலே பவளக் குடத்தோடு சதுரமாக அமைத்த கழுத்துக்கொண்ட தூண்கள் நாட்டி, பளிங்கு உத்தரங்களையும் பவளக் கொடுங்கைகளையும் பரப்பி மூன்று அடுக்குகளை அமைத்து, சிற்ப சாஸ்திர விதிப்படி பலவகை மணிகளால் விமானத்தை எழில்மிக விளங்கவைத்தனர். சோமசுந்தரக் கடவுள் தடாதகைப் பிராட்டியாரோடு வீற்றிருப்பதற்கு நவமணிகள் இழைத்த பொன்னிருக்கை ஒன்றும் அமைத்தனர்.

கற்பகத் தரு ஆடை அணிகலன்களைக் கொடுத்தது. காமதேனு அறுசுவை நல்கும் ஐவகை உணவுகளைக் கொடுத்தது. சிந்தாமணி கருதிக்கேட்ட பொருள்களை யெல்லாம் கொடுத்தது. மதுரைத் திருநகரச் சிறப்பிலே தேவர் தலைநகரே நாணம் உற்றது.

மலயத்துவச பாண்டியன் திருமகளாகிய தடாதகை தேவியாரின் திருமண விழாவினைக் கண்டு களிக்க உலகின் பல்வேறு பகுதிகளில் இருந்து அரசர் அனைவரும் திறைப்பொருள்களோடு வந்தனர். திருமால், பிரம்மா, இந்திரன், உருத்திரர்கள், அஷ்டபைரவர், அஷ்டதிக்கு பாலகர்கள், அஷ்ட வசுக்கள், சூரியர், சந்திரர் முதலிய தேவர், நாரதர், வியாசர் ஆகிய மகரிஷிகள் எல்லாரும் வந்து நிரம்பினர். பெருநிதிக் கிழவனான குபேரனே சிவபெருமானுக்குத் திருமணக்கோலம் புனைவித்து மகிழ்ந்தான். திருமண மங்கலம் கோலம் கொண்ட சிவபெருமானுக்குத் திருமணக்கோலம் புனைவித்து மகிழ்ந்தான். திருமண மங்கலக் கோலம் கொண்ட சிவபெருமான் ரிஷப வாகனத்தின்மீது எழுந்தருளினார். மதுரைப் பெரும்பதியை நோக்கி அனைவரும் ஒரு முகமாகக் கிளம்பினர். மதுரையம்பதி மணவாள சுந்தரரைப் பொற்சின்னங்கள் ஆர்த்து வரவேற்றது. சுமதி முதலியவர்கள் எதிர்வந்து தரிசித்து வணங்கினர். பல் தேசத்துப் பெண்டிர் எதிர்கொண்டு வந்து தரிசித்தனர். அனைவரும் மணமகனையும் மணமகளையும் வியந்து போற்றினர். மங்கல

மங்கையர் அஷ்ட மங்கலப் பொருள்களை ஏந்திவர, தேவமாதர் கற்பூரம் காட்ட, இன்னிசைக் கருவிகள் இயம்ப, சிவபெருமான் அரச மாளிகைக்கு எழுந்தருளினார்.

பின்னர் காஞ்சனமாலையார் சிவபெருமானை அண்டி வணங்கி, தேவரீர் தடாதகையைத் திருமணம் செய்து கொண்டு இந்த நகரத்தின் செல்வத்தையும் கன்னிப் பாண்டி நாட்டையும் கைக்கொண்டு அரசு செய்து அருள்வீராக என்று விண்ணப்பித்துக் கொண்டார். சிவபிரான் திருவுள்ளம் இசைந்து இசைக்கருவிகள் இன்னொலி வழங்கத் திருக்கல்யாண மண்டபத்தை அடைந்தருளினார். ஆங்குச் சென்று சதுர்வேதங்கள் முழங்கச் சிங்காதனத்தில் வீற்றிருந்தருளினார். திருக்கல்யாண மண்டபத்திலே இரு மூர்த்திகளும் தேவர்களும் மண்ணுலகத்தவரும் நெருங்கி அமர்ந்திருந்தனர். திருமண முகூர்த்தம் வருகின்றவரையும் தேவமாதர் புரியும் ஆடலைக்கண்டு அருள்வாராயினர்.

தடாதகைப் பிராட்டியாரும் திருமஞ்சனம் ஆடி, தான தருமங்கள் பல செய்து திருமணக்கோலம் புனையத் தொடங்கினார். லக்ஷ்மியும், சரஸ்வதியும் போட்டி போட்டுக்கொண்டு பிராட்டியாருக்கு அலங்காரம் செய்வித்தனர். பிராட்டியார் அணிந்த ஆடை வகைளையும் அணிமணிகளையும் உத்தமக் கவிஞர்களாலும் வருணித்தல் இயலாது. சிவபெருமான் அளவற்ற ஆனந்தமும் ஆச்சரியமும் கொள்ளுமாறு அமைந்திருந்தது திவ்யாலங்காரம்.

திருமணத்திற்குரிய நன்னிமித்தம் வர, கலைமகளும் திருமகளும் கைலாகு கொடுக்க, வேதங்கள் கோஷிக்க எழுந்தருளினார் சுந்தரவல்லி தடாதகைதேவி. திருமண முரசங்கள் ஒலித்தன. சங்குகள் முழங்கின. விண்ணவர் மலர் பொழிந்தனர். மணமகள் அசைந்து மெல்ல நடந்து வந்து ஒதுங்கி, தம்பால் கருணை நிரம்பிய சிவ பெருமான் அருகில் அமர்ந்தருளினார். செம்பொன் மணித்தவிசின் மேல் சிவபெருமானுடன் தடாதகைப் பிராட்டியார் நெருங்கி இசைந்து அமர்ந்திருந்த திருக்கோலம் பண்ணும் பாடலும், நீரும் தண்மையும், பாலும் சுவையும், மலரும் மணமும், மணியும் ஒலியும் போலத் திகழ்ந்தது.

திருமண வைபவம் தொடங்கியது. மகாவிஷ்ணு பொற் கலசத்திலுள்ள நன்னீரால் மணமகன் சிவனாரின் திருவடிகளைக் கழுவினார். மணம் கமழும் சந்தனம் இட்டு மலர் தூவினார். திருவடி

கழுவிய நன்னீரை அனைவரும் சிரமேல் தெளித்துக்கொண்டனர். பின்னர் ஆங்கிருந்த மகாவிஷ்ணு காந்தள் மலரைப்போல் சிவந்த சிவபெருமானது வலத்திருக்கரத்திலே தடாதகைப் பிராட்டியாரின் வலத்திருக்கரத்தை வைத்து வேதமந்திரம் சொல்லித் தாரை வார்த்துக்கொடுத்துக் கன்யாதானம் செய்தார். தேவர்கள் பூமழை கொண்டு சொரிந்தனர். சித்தவித்யாதரர் கண்டு மகிழ்ந்தனர். பாவலர் நாவலர் பாடி மகிழ்ந்தனர். அரம்பையர் ஆடினர். விஞ்சையர் அமுத கீதம் பாடினர். முனிவர்கள் ஹரஹர என்று தோத்திரம் செப்பினர். யாவரும் தேவத் திருமண இன்பத்திலே உளமாரத் திளைத்தனர்.

பிரம்மதேவன் தனது நான்கு புத்திரர்களுடன், நாற்புறங்களிலும் நான்கு மறைகளின் மங்கள மொழி ஒலிக்க, திருமணச் சடங்குகளை வேதாகம சிவாகம முறைப்படி நிறைவாகச் செய்து முடித்தார். மகாயோகியான சிவபெருமான் தடாதகைப் பிராட்டியாருக்குத் திரு மாங்கலியம் பூட்டிப் பாணிக்கிரஹணம் செய்துகொண்டார். உலகங்களெல்லாம் உயிர்களெல்லாம் பேரின்பம் அடைந்தன.

பின்னர் திருமாலுக்கும் நான்முகனுக்கும் தேவர்கட்கும் தம் சிவகணங்களுக்கும் நீங்காத அருட்பிரகாசத்தை வழங்கி அருளினார் சோமசுந்தரப் பாண்டியக் கடவுள். வந்திருந்த ஏனையோருக்கும் வரிசை முறைப்படி வழங்கி அருளி அருள்விடை கொடுத்தனுப்பினார்.

அதன் பின்பு சிவபெருமான் நல்லரசாட்சி நடத்திக் காட்டியருளினார். வெள்ளிப் பொருப்பை விட்டு நீங்கிய சிவபெருமான் பாண்டிநாடு ஆட்சிப் பொறுப்பை ஏற்று, சோமசுந்தர பாண்டியனாக விளங்கியருளினார்.

***(ஆதாரம் : புலவர் மணி எழுதிய திருவிளையாடற்புராணம் வசனம்)***

***(தொடரும்...)***

## வாழ்த்துகிறோம்

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் முதன் முறையாக மூன்றாண்டுப் பட்டப்படிப்பை முடித்து, அழகப்பா பல்கலைக்கழக அளவில் **கணினியியல்** பாடத்தில் **ஐந்தாமிடம், ஆறாமிடம்** பெற்ற மாணவியர் எஸ்தர் கிரேஸ், நவலெட்சுமி ஆகியோரையும் பி.பி.ஏ., பட்டப்படிப்பில் **ஆறாமிடம்** பெற்ற மாணவி **இராதாவையும்** பாராட்டி வாழ்த்துகிறோம்.

**கல்லூரி நிர்வாகத்தினர்**

# பட்டினத்தார் பைந்தமிழ் - 2

(தமிழாகரர் தெ. முருகசாமி, முன்னாள் முதல்வர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி, புதுச்சேரி - 9)

பட்டினத்தார் என்றதும் அவரை முற்றுந்துறந்த துறவி என அடையாளப்படுத்துவதே அவர்க்கான தனிச் சிறப்பாகும். பட்டினத்துப் பிள்ளையைப் போல் ஆரும் துறக்கை அரிது என்பார் தாயுமானவர். ஆக, துறவு என்பது புற வேடத்தாலன்று என்பதும் அகத்தால் மேற்கொள்ளும் பண்பே என்பதும் உணரப்படுதலால் துறவுக்கான இலக்கணத்தைப் பட்டினத்தாரே வகுத்தார் எனலாம். அத்துறவின் சாயலை அய்யன் திருவள்ளுவர், வேண்டின் உண்டாகத் துறக்க, துறந்தபின் ஈண்டியற் பால பல (342) எனக் கூறியாங்குத்துறந்த சிறப்புக் குரியவரே பட்டினத்தார் ஆவார்.

துறவினை விரும்பினால் வாய்ப்புள்ளபோதே அதாவது எல்லாம் முற்ற உள்ளபோதே துறக்க வேண்டுமாம், அவ்வாறு துறந்தபின் அத்துறவில் செய்ய வேண்டியபணிகள் பல உளவாம் - என்கிறார் வள்ளுவர். இக்குறட் பொருள் முழுமைக்கும் பட்டினத்தார் தக்க சான்றாவார்.

எல்லாம் உள்ளபோதே துறந்துவந்ததும் அவர் ஆற்றிய இலக்கியப் பணிதான். வள்ளுவர் கூறும் துறந்த பின் ஈண்டு இயற்பால பல என்றதன் பொருட் புலப்பாட்டோடு திருவெண்காட்டை விட்டு புறப்பட்டவர், தாம் மேற்கொண்ட திருத் தலப்பயணத்தில் ஐந்து நூல்களைச் செய்தருளினார். ஆன்மீகக் கல்வியை உபதேசமாக ஆன்மாக்களுக்கு உணர்த்தியதுதான் பட்டினத்தாரின் துறவு வாழ்வாலான பயன் எனலாம். அந்த வகையில் பட்டினத்தார், 1.கோயில் நான்மணிமாலை, 2.திருக்கழுமல மும்மணிக்கோவை, 3.திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, 4.திருஏகம்பமுடையார் திருவந்தாதி, 5.திருஒற்றியூர் ஒருபா ஒருபஃது - என்ற நூல்களை அருளினார், இவை பதினோராம் திருமுறையில் அடங்கியவையாகும். அவற்றுள் கோயில் நான்மணி மாலை என்ற நூற்சிறப்பை உணர்வோமாக!

தெய்வத் தமிழான பன்னிருதிருமுறைப் பாடல் ஆசிரியருள்

பட்டினத்தாரும் ஒருவர். பன்னிரு திருமுறைத் தோற்றத்திற்கு நகரத்தார் மரபில் வந்த புனிதவதியாராம் காரைக்காலம்மையார் முதற்காரணமாவார். அவரைப் பின்பற்றியே மூவர் தேவாரமும் பண்ணிசையோடு தோன்றின. இத் திருமுறைத் தோற்றவரிசையில் மீண்டும் நகரத்தாரின் பங்களிப்பாகப் பட்டினத்தார் திகழ்கிறார். முற்றும் துறந்த நிலையில் அவர் மேற்கொண்டு திருத்தலப் பயணத்தில் சீர்காழியாம் கழுமலத்தைப் பாடிப் பணிந்ததும் தில்லையாம் சிதம்பரம் வந்து ஆடவல்லானைப் பாடுகிறார்.

திருத்தலப் பயணவரிசை இங்ஙனம் அமைந்தாலும் கோயில் என்றாலேயே சைவர்கட்குத் தில்லைச் சிற்றம்பலம் என்பதால் பட்டினத்தார் முதலில் பாடிய கழுமலப்பாட்டு இரண்டாமிடத்திலும் இரண்டாவதாகப் பாடிய தில்லைப்பாட்டு முதலாவதாகவும் வரிசைப்படுத்தப்பட்டன. இங்ஙனம் வரிசைப் படுத்தியதில் ஒரு தெய்வாம்சக் குறிப்பு உள்ளதாக நினைக்கத் தோன்றுகிறது.

கோயில் என்பதைக் கோவில் என்றும் கூறலாம். இரண்டும் ஆலயம் என்ற ஒருபொருளைக் குறிக்கும். நன்னூல் இலக்கண விதிப்படிக் கோவில் என்பதாகவும் அமையலாம், இவ்வாறு இலக்கணப்படி இரு சொற்களும் ஆலயம் என்பதைக் குறித்தாலும் நகரத்தாரின் வழிபாட்டு மரபில் கோவிலூர் என்பது கோயிலூராக மாறாத நிலையில் கோயில், கோவில் என்ற சொற்கள் பொதுநிலையினின்றும் மாறித் தனிச் சிறப்பான வகையில் தனித்தனிப் பொருளை நகரத்தார் வழி உணருமாறுள்ளது.

கோவிலூர் என்றால் திருநெல்லைத்தாய் உடனாய கொற்றவாளீசர் வீற்றிருக்கும் திருக்கோயில் கொண்டதும் நகரத்தாரின் வேதாந்தத் திருமடமான ஆதீனம் கொண்டதுமான ஊரைக் குறிக்கும். இந்தப் பெயரிலேயே மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் கோவிலூர்ப் புராணம் பாடியுள்ளார். ஆனால் கோயில் புராணம் எனச் சைவர்களுக்குப் பெருங் கோயிலாகிய தில்லை பற்றியதைக் கொற்றவன்குடி உமாபதிசிவா சாரியார் பாடியுள்ளார்.

இந்த இரு புராணப் பாங்கின் அடிப்படையில் மட்டும் கோவில், கோயில் என்பன தனித்தனி ஊரைச் சுட்டுவதாய் அமைந்தன

எனலாம். இந்த வகையில் கோயில் என்ற சொல்லைத் தில்லைக்குரியதாக மணிவாசகர் பாடிய இரண்டு பதிகங்கள் கோயில் திருப்பதிகம் என்றும் கோயில் மூத்த திருப்பதிகம் என்றும் பெயர் பெற்றுள்ளன. அந்த வகையிலேயே திரு வெண்காட்டடிகளாம் பட்டினத்தார் தில்லையம்பலவனைப் போற்றிப் பரவிப் பாடிய நூலே கோயில் நான் மணி மாலையாம்!

96 சிற்றிலக்கியங்களுள் மாலை என்பதும் ஒரு பிரிவாகும். மாலை என்ற சொல் தொடர்ச்சி என்ற பொருளைத்தரும். வெவ்வேறு நிறங்களையுடைய நால் வகை மணிகளால் ஒன்றன்பின் ஒன்றாக மாறிமாறிக் கோர்வையாகச் சமைக்கப் பெறும் மாலைபோன்று வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரியவிருத்தம், அகவல் என்னும் நால்வகைப் பாவால் அந்தாதித் தொடையமையப் பாடப்பெறுவது நான்மணிமாலையாம்.

**வெண்பாக் கலித்துறை விருத்தம் அகவல்**
**பின்பேசும் அந்தாதி யினாற்ப துபெறின்**
**நான்மணி மாலை யாமென நவில்வர்**

என்பது இலக்கண விளக்க நூற்பா.

இவற்றுள் வெண்பாவும் அகவலும் பாவகை; கலித்துறையும் விருத்தமும் பாவின் இனவகை, இந்நாற்பா அமைப்பையும் மணிமணியாகப் பாடியதால் மணி மாலை எனப்பட்டாலும் முத்து, பவளம், மரகதம், மாணிக்கம் என்னும் நால்வகை மணிகளைக் கொண்டு கோக்கப் பெற்ற மாலை போன்று நிரல் நிறையாக வெண்பாவுக்கு முத்தும் கட்டளைக் கலித் துறைக்குப் பவளமும் ஆசிரிய விருத்தத்திற்கு மரகதமும் ஆசிரியப் பாவுக்கு மாணிக்கமும் உதாரணமாகும் எனச் சான்றோர் கூறுவர்.

முத்தும் பவளமும் கடல் படுபொருள்கள்; மரகதமும் மாணிக்கமும் மலைபடு பொருள்கள்; ஆழமான கடலும் உயரமான மலையும் ஈண்டுச் சுட்டியதன் காரணத்தால் ஏற்றத் தாழ்வான நிலையில் ஆன்மா இவ்வுலகியலில் வாழ்ந்தாலும் அது (ஆன்மா) லயக்க வேண்டிய இடம் ஆலயம் (ஆ-ஆன்மா, லயம்- ஒன்றுசேர்தல்) என்பதைச் சுட்டி உணர்த்தும் பாங்கிலேயே பட்டினத்தாரின் கோயில் நான்மணி மாலை

நூல் அமைந்துள்ளது எனலாம். ஏனெனில் நான் மணி மாலை எனும் இலக்கியத்தில் இதுவே முதல் நூலாகும். இதன் பின்னரே திருவாரூர் நான்மணி மாலை, பழநி நான் மணிமாலை, நால்வர் நான் மணிமாலை என நூல்கள் தோன்றின என்பதால் ஆன்மா லயக்க வேண்டிய இடம் தில்லையாம் கோயில் என்பதால் பட்டினத்தார் மெய்கண்ட சாத்திரத் துளிர்ப்புடன் கோயில் நான் மணிமாலை எனப்பாடி முதன்மைப் படுத்தியது சிறப்பிற் குரியதாகும்.

பொதுவாக நூலின் தொடக்கம் மங்கலச் சொல்லால் அமைய வேண்டும் என்பர், அந்த வகையில் பூ என்ற மங்கலச் சொல்லாம் ஓரெழுத்து ஒரு மொழியால் பட்டினத்தார் தொடங்குகிறார்.

**பூ மேல் அயன்அறியா மோலிப் புறத்ததே**
**நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம்! பாமேவும்**
**ஏத்துகந்தான் தில்லை இடத்துகந்தான் அம்பலத்தே**
**கூத்துகந்தான் கொற்றக் குடை.**

அருளாளர்களும் அன்பர்களும் பாடுகின்ற பாக்களை விரும்பித் தில்லையம்பலத்தில் நடனமாடும் நடராசப் பெருமானின் வெண்கொற்றக் குடையானது, அன்னமாய்ப் பறந்து சென்ற பிரமனாலும் காணமுடியாத ஈசனின் திருமுடிக்கும் மேலாக உள்ளதாகும். அத்தகு குடையின் சிறப்பை நம்மாலா பாடிப் புகழமுடியும் என வியக்கின்றார் அடிகள். திருமுடிக்கு மேலே உள்ளது குடை; முதலில் திரு முடியையே காணமுடியாத போது அதற்கு மேல் உள்ள குடையை எங்ஙனம் காண்பது ? என மலைத்துப் போகிறார் அடிகள். இந்த வியப்பைக் குறிக்கும் விதமாகவே நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம் எனக் கூறியதில் நாமே என்றதன் ஏகாரம் வினாப் பொருளில் அமைந்துள்ளது.

நின்னளந்தறிதல் மன்னுயிர்க்கு அருமை எனத் திருமுருகாற்றுப் படையில் (298) நக்கீரர் கூறுவது போல இறைவனது புகழை அளந்தறிய முடியா தென்பதைப் பட்டினத்தார் கூறுவது பொருத்தமாக உள்ளது. இவ்விருவரின் தொடர்களும் பதினோராம் திருமுறையில் உள்ளதால் இக்கருத்தை இப்பதினோராம் திருமுறையின் சாரம் என்றாலும் தகும்.

பட்டினத்தார் பூ எனத் தொடங்கினாலும் அது தாமரைப் பூவையே குறிக்கும். பூ எனப்படுவது பொறி வாழ்பூவே எனச் சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான் மணி மாலையில் கூறுவார். இலக்குமி வாசம் செய்யும் இடம் தாமரையாகும். பூவாம் தாமரையில் வாசம் புரிவோர் இருவர். ஒருவர் இலக்குமி; மற்றொருவர் கலைமகளாம் சரசுவதி; இருவரும் செந்தாமரை, வெண்டாமரைகளில் வீற்றிருப்பர்.

ஈண்டுப் பட்டினத்தார் பொதுவாகத் தாமரை மலர்மேல் உள்ள பிரம்மா எனக் கூறியதால் பிரம்மா வீற்றிருக்கும் தாமரை, செந்தாமரையா? வெண்டாமரையா? என்ற ஐயத்தைத் தோற்றுவித்தே பாடலைத் தொடங்கியதை நினைத்தால் உண்மை விளங்கும்.

பாடலின் கருத்தாகக் குடையைச் சிறப்பித்தல் உள்ளதால் அந்தக்குடை என்பது சாதாரண மக்களுக்கான குடையன்றி நடராசா வின் குடைஎன்பதால் பொதுவாக அரசர்க் குரியது வெண் கொற்றக் குடை என்ற கருத்திற்கேற்பச் சரசுவதி வீற்றிருக்கும் வெண்டாமரையே பிரமனுக்குரிய இடம் என்றவகையில் பூ மேல் என்ற தொடரை அடிகள் நுட்பமாக உணர்த்தினார். இதன் பேருண்மையை,

**திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்**
**கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண் குடை போன்றிவ்**
**அங்கண் உலகளித்தலான்**

என இளங்கோவடிகளின் வரிகளால் உணரலாம். குளிர்ந்த ஒளியுடனும் இருளைப் போக்கியும் வானவீதியில் உலா வரும் திங்களைப் போலத் தில்லைக் கூத்தன் ஆன்மாக்களின் அஞ்ஞான இருள்போக்கித் தண்ணளி தந்துதவுவான் என்ற குறிப்பை உள்ளடக்கிய கருத்தில் முதற்பாடலைப் பட்டினத்தார் முன்மொழிந்தார் எனலாம்.

*(தொடரும்...)*

**அட்டையில் இடமிருந்து வலம்**

**முன்வரிசை -** நா.மீனவன், கண்ணப்ப செட்டியார், கோவிலூர் ஆதினம், சொ.சொ.மீ. சுந்தரம், சே. குமரப்பன்

**பின்வரிசை -** நீ.சி. சுந்தர ராமன், மாயாண்டி, ரவிந்திரன், செல்லப்பா, மணிமொழி மோகன், மணிமொழி முருகன்.

## அதிமதுரக் கவிகள்

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

தமிழில் சொற்சுவை பொருட்சுவை நிரம்பிய பல தனிப்பாடல்கள் காணக்கிடக்கின்றன. விளையாட்டாய்க் கவி பாடித்திரியலாமே என்று ஒரு பழங்காலப் புலவர் சொல்லியபடி நினைத்த மாத்திரத்தில் கவியெழுதும் புலவர்கள் ஏராளமாக இருந்துள்ளனர். அவர்கள் பாடிய பலவற்றைத் தனிப்பாடல்கள் என்ற தலைப்பில் தொகுத்துள்ளனர்.

சொன்னவுடனே பாடுகின்ற ஆசு கவிகள், திறமை தோன்ற வித்தாரமாகப் பாடுகின்ற வித்தார கவிகள், இனிமை தோன்றப் பாடுகின்ற மதுர கவிகள், தேர்குளம் முரசு கமலம் நாகம் போன்ற ஓவியங்களை வரைந்து அதாவது சித்திரங்களை வரைந்து அவற்றுள் தளை சீர் முதலியன பொருந்த எழுதும் சித்திரக் கவிகள். இவ்வாறு நான்கு வகையிலும் எழுதும் ஆற்றல் வாய்ந்தோரை நாற்கவி வல்லோர் என்று அழைத்தனர். தமிழில் அகப்பொருள் விளக்கம் எழுதியவர் பெயர் நாற்கவிராச நம்பி என்பதாகும்.

எல்லாப் பாடல்களும் மிக இனிமையாக இருப்பதால் இனிப்பைக் குறிக்கும் மதுரம் என்பதைச் சேர்த்து அனைத்திற்கும் அதிமதுர கவிகள் எனத் தலைப்பிடப்பட்டது. அதிமதுரகவி என்ற சொல்காளமேகப் புலவரின் வரலாற்றில் வரும் அதிமதுர கவிராயர் என்பதைப் பொதுவாக்கி இத்தலைப்பிடப்பட்டது.

இதில் அதிகம் தனிப்பாடல்களைப் பாடியவர்காளமேகப் புலவரே. முதலில் அப்புலவர் பெருமானைப் பற்றியும் அவர் பாடிய கவிகளையும் விளக்குவோம். கம்பர் புகழேந்தி ஒட்டக் கூத்தர் இரட்டைப் புலவர் எனப்பலர் பாடிய பாடல்களை அனைவரும் படிக்க வேண்டும் என்ற அவாவினால் இது எழுதப்படுகின்றது.

### கவிகாளமேகம்

திருக்குடந்தை என்றும் குடமூக்கு என்றும் அழைக்கப்படுவதோடு 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் மாமாங்கம் என்று சொல்லப்பெறும் மகாமகத் திருவிழா நடக்கும் இடமாகவும் விளங்கும் கும்பகோணம் என்ற பதியின் அண்மையில் உள்ள நந்திபுரம் என்ற ஊரில் வடமர் என்ற வகையில் வரும் வைணவர்; அந்தணர் குலத்தில்

தோன்றியவர். இவரை வரதர் என்ற பெயரால் அழைத்து வந்தனர். இதற்குச் சான்றாகக் கீழ்க்கண்ட பாடலை ஆதாரமாகக் காட்டுவர். காளமேகப் புலவர் மறைந்த சமயம் அதிமதுரகவி பாடிய பாடலாக இதனைக் கூறுவர். சிலர் இரட்டைப் புலவர்கள் பாடியதாகவும் கூறுவர். காளமேகம் திருமலைராயன் முன்னால் மன்னனின் அவைப் புலவர்கள் கேட்ட குறிப்புகளைக் கொண்டு இயற்றிய செய்யுள் ஒன்றில் வருகின்ற தொடரான மண்தின்றபாணமென்ற வாய் என்ற தொடரின் அழகைச் சுவைத்து அதனையே ஈற்றடியாக்கிப் பாடிய வெண்பா இது.

*வாசவயல் நந்தி வரதா திசையனைத்தும்*
*வீசு கவிகாள மேகமே - பூசுரா*
*விண்நின்ற வெவ்அழலில் வேகுதே பாவியேன்*
*மண்தின்ற பாணமென்ற வாய்.*

**திருமோகூர்**

காளமேகப் புலவர் பிறந்த ஊரைத் திருமோகூர் என்றும் கூறுவர். திருமோகூர் புகழ்பெற்ற வைணவத்தலம். அத்தலத்தின் இறைவனைக் காளமேகம் என்ற பெயரால் அழைப்பர். அக்கோயிலில் பரிசாரகராய் இருந்த ஒருவரின் மகன் இவர் என்பாரும் உண்டு.

**பரிசாரகப்பணி**

வரதன் என்ற பெயரோடு அவர் இருந்தகாலத்தில் தன்னுடைய வாழ்க்கைத் தேவைக்கான பொருளை ஈட்டிடத் திருவரங்க நகரை நாடி வந்தார். அங்குள்ள அரங்கன் திருக்கோவிலில் தனக்குத் தெரிந்த பரிசா ரகப் பணியில் அமர்ந்தார்.

**தாசி மோகனா**

இப்படி இருந்துவரும் நாளில் திருவரங்கத்தின் கீழ்பால் உள்ள திருவானைக்காவல் அகிலாண்டேசுவரி ஆலயத்தில் நடனமாடுகின்ற உரிமை பெற்ற தாசியருள் ஒருத்தியாகிய மோகனாங்கி என்பவள்மேல் ஆசை கொள்ள அவளும் இணங்கி இவருடன் வாழ்வாளாயினள்.

**அகிலாண்டேசுவரி ஆலயப்பணி**

ஒருநாள் தாசி மோகனாங்கி தனக்குரிய குடவரிசை முறை வரும் நாளில் மாணிக்கவாசக சுவாமிகள் பாடிய திருவெம்பாவையில் உள்ள உன் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று தொடங்கும்

பாடலில் வரும் என்கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க என்று பாடி அபிநயம் பிடித்தபோது கண்ட பிறதாசிகள்.

இவளோ ஒரு வைணவனை ஆசை மணாளனாக வைத்துக் கொண்டிருக்கின்றாள். ஆனால் சிவனடியாரைத் தவிர யாருடனும் சேருவதில்லை என்று பாடுகிறாள். நன்று மிக நன்று என்று நையாண்டி செய்தனர். இதைக் கேட்டதாசி மோகனாங்கி மிக்க வருத்தத்தோடு தன் இல்லம் சேர்ந்து பணிப்பெண்ணை அழைத்து இன்றிரவு வரதர் வந்தால் கதவம் திறக்க வேண்டாம் என்று ஆணையிட்டுப் படுத்துக் கொண்டாள்.

### தாழிடப்பட்ட கதவு

வழக்கப்படி இரவில் மோகனாங்கி இல்லம் தேடி வந்த வரதர் கதவு தாழிடப்பட்டிருப்பதை அறிந்து கதவைத் தட்டினார். கதவைத் திறந்த பணிப் பெண் தன் தலைவி மோகனாங்கியின் நிலையை எடுத்துக் கூறினாள். மிகவும் வருத்தமுற்ற வரதர் ஒரு முடிவுடன் விரைந்து சென்றார்.

### அகிலாண்டேஸ்வரி ஆலயப் பணி

மறுநாள் காலை எழுந்த வரதர் தான் எண்ணியபடி தன் மேலிருந்த வைணவச் சின்னங்களை நீக்கிவிட்டுச் சைவச் சின்னங்களைத் தரித்தவராகித் திருவானைக்காவல் அகிலாண்டேஸ்வரி ஆலயப் பரிசாரகர் ஆனார். இது கண்ட மோகனாங்கியும் அவர்பால் இருந்த வெறுப்பு மாறி முன் போல் விருப்பமுடையவளாகி அவருடன் மனம் ஒத்த அன்புடன் வாழ்ந்து வரலானாள்.

### தேவி உபாசகன்

தனக்கும் புலமையும் அளவிலாஞானமும் வேண்டுமென விரும்பிய தேவி உபாசகன் ஒருவன் அன்னை அகிலாண்ட நாயகியைக் குறித்து வழிபாடு செய்துகொண்டிருந்தான். இரவு பகலாக விடாப்பிடியாக நோன்பிருந்தமை கண்டு மகிழ்ந்த தேவியும் அவன் விருப்பத்தை நிறைவேற்றத் திருவுளம் பற்றினாள்.

**வரம்தர வந்த தேவி**

அன்னை பராசக்தி ஒரு சிறு பெண்போல் உருமாறி நள்ளிரவின் நடுச்சாம வேளையில் தியானத்திலிருந்த அவ்வுபாசகனை நோக்கி அவன் முன்னர் நின்றாள். வாயில் நிறையத் தாம்பூலம் இருந்தது. அவன் முன்னர் நின்ற அம்பிகை அவனை நோக்கி எங்கே உன் வாயைத் திற; நான் என்வாய்த் தாம்பூலத்தை உமிழ வேண்டும் என்று சொன்னாள்.

**வாய் மாறிய தாம்பூலம்**

இதனைக் கேட்ட உபாசகன் தியானத்திலிருந்து விழித்து அச் சிறுமியை நோக்கித் தாம்பூலத்தை என்வாயில் உமிழ என்வாய் என்ன உனக்குப் படிக்கமா? இனி இங்கிருந்து அகன்றுவிடு; இங்கேயே நின்று கொண்டிருந்தால் நான் என்ன செய்வேனோ? என்று விரட்டினான். அவனுக்கு நல்லூழ் இல்லாத காரணத்தால் தன் வாயில் நிறைந்த தாம்பூலத்துடன் ஆலயத்தைச் சுற்றி வந்தாள்.

அங்கு வழக்கம் போல் மோகனாங்கியின் நடன சேவை முடியும் வரை காத்திருந்து பின் அவளுடன் வீடு திரும்பும் வரதன் அவள் வரும் அங்குள்ள ஒரு மண்டபத்தில் தன்னை மறந்து உறங்கிக் கொண்டு இருந்தான். அதனை அறியாத தாசி மோகனாவும் தன் பணி முடிந்து வரதனைத் தேடிட அவன்மறைவாக உறங்கிக் கொண்டிருந்தமை அறியாது சென்று விட்டாள். கோவிலாரும் கதவை மூடிப் பூட்டிச் சென்று விட்டனர். வரதனின் நல்விதி காரணமாக அங்கு வந்த அம்பிகை அகிலாண்டவல்லி அவனைத் தட்டி எழுப்பினாள். கண்டதும் அப்பா! உன் வாயைத்திற நான் தாம்பூலத்தை உமிழ வேண்டும் என்றதும் உறக்க மயக்கத்தில் தன் வாயைத் திறந்தான் வரதன். வரதனின் திறந்த வாயில் தன்வாய்த் தாம்பூலத்தை உமிழ்ந்த தேவி மறைந்தாள்.

*(தொடரும்....)*

**அறிவிப்பு :** 04.11.2016 அன்று திருவண்ணாமலையில் நடைபெற இருந்த ஈசான்ய ஞானதேசிக ஜீவசமாதி குடமுழுக்கு விழா சிலதவிர்க்க முடியாத காரணங்களால் 09.12.2016 அன்று நடைபெறும் என்பதை ஆன்மீக அன்பர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

***கோவிலூர் ஆதீனம்***

## மடாலய நிகழ்வுகள்

தமிழ்நாட்டின் பண்பாடு கலாச்சாரம் ஆகியவற்றை அறியச் சுற்றுலாத் தூதுவராகப் போர்த்துக்கீசிய அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள செல்வி கிறிஸ்டியானாவயனா தமிழகம் வந்துள்ளார். தமிழகம் வந்துள்ள இவர் செட்டிநாட்டின் கலாச்சாரத்தைப் பார்க்க விருப்பம் தெரிவித்து, கோவிலூர் மடாலயத்தில் உள்ள செட்டிநாடு அருங்காட்சியகத்திற்கு வருகை புரிந்து அங்குள்ள கலைப்பொருட்களைப் பார்வையிட்டார்.

23.09.2016 அன்று கோவிலூர் அருங்காட்சியகத்துக்கு வந்த இவர்களைக் கோவிலூர் மடாலய மக்கள் தொடர்பு அலுவலரும் கல்வி ஆலோசகருமான டாக்டர் குமரப்பன் மற்றும் மடாலய அலுவலர் அழகப்பன், ஆகியோர் மடாலயத்தின் சார்பில் வரவேற்றுப் பொன்னாடை அணிவித்தனர். பேராசிரியர் டாக்டர் குமரப்பன் அருங்காட்சியகத்தில் உள்ள பொருட்கள் குறித்து விளக்கிக் கூறினார். கோவிலூர் வருகை மகிழ்ச்சி தருவதாகவும் அருங்காட்சியகத்தில் உள்ள பொருட்கள் சிறப்பாக இருப்பதாகவும் கூறிச் சென்றனர்.

### கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி மாணவிகள் ஹாக்கி போட்டியில் வெற்றி

மவுண்ட்சீயோன் பள்ளியில் 05.10.2016 அன்று நடைபெற்ற சிவகங்கை மாவட்ட அளவிலான விளையாட்டுப் போட்டிகளில் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி மாணவிகள் ஜூனியர் ஹாக்கிப் போட்டியில் திருப்பத்தூர் ஏ.வி.எம்.மெட்ரிக் பள்ளி அணியுடன் விளையாடி வெற்றி பெற்றனர். பெற்றிபெற்ற ஜூனியர் மகளிர் ஹாக்கி அணியினரைக் கோவிலூர் ஆதீனம் உட்பட அனைவரும் பாராட்டினர்.

### கோவிலூர் - பல்கலைக்கழக அளவிலான கைஉந்துபந்துப்போட்டி

22.09.2016 அன்று தமிழ்நாடு உடற்பயிற்சிப் பல்கலைக்கழகத்தில் இணைப்புப் பெற்ற கல்லூரிகளுக்கு இடையேயான ஆண்கள் கைஉந்து பந்துப்போட்டிகள் கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சி மற்றும் விளையாட்டுக் கல்லூரி மைதானத்தில் நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமை வகித்து ஆசியுரை வழங்கினார். டாக்டர் ரவீந்திரன் வரவேற்றார்.

அழகப்பா பல்கலைக்கழக உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் டாக்டர் சுந்தர் போட்டிகளைத் தொடங்கி வைத்தார். ஆலோசகர் டாக்டர் குமரப்பன், உடற்பயிற்சிப் பல்கலைக்கழகப் பிரதிநிதி பேரா. ஆறுமுகம் பங்கேற்றனர். கல்லூரிப் பேராசிரியை விமலாதேவி நன்றி கூறினார்.

9 கல்லூரிகள் இப்போட்டியில் பங்கேற்றன. சிறந்த விளையாட்டு வீரரும் ஓய்வுபெற்ற உடற்பயிற்சி ஆசிரியருமான சீனிவாசன் வெற்றி பெற்றவர்களுக்குக் கோப்பைகளையும் சான்றிதழ்களையும் வழங்கினார். கல்லூரி முதல்வர்கள் டாக்டர் செல்லப்பா, திரு.மாயாண்டி, மடாலய அலுவலர்கள் அழகப்பன், நேரு பங்கேற்றனர்.

29.09.2016 அன்று கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் ஐந்தாம் ஆண்டு பட்டயமளிப்பு விழா சிறப்பாக நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் பட்டயம் பெறும் மாணவ மாணவிகளை ஆசி வழங்கி வாழ்த்தினார்கள். அறந்தாங்கி அரசு பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் முகமது பாரூக் பட்டமளிப்பு விழா உரையாற்றி 87 மாணவ மாணவிகளுக்குப் பட்டயங்கள் வழங்கினார். கல்லூரி முதல்வர் மாயாண்டி வரவேற்புரை ஆற்றி உறுதி மொழியினை வாசித்தார். ஆலோசகர் டாக்டர் குமரப்பன் வாழ்த்திப் பேசினார். துறை சார்ந்த தலைவர்கள் தத்தமது துறையைச் சார்ந்த மாணவர்களைப் பட்டயம் பெற அழைத்தனர். பாலிடெக்னிக் கல்லூரியின் முன்னாள் துணைத்தலைவர் நடராஜன், முன்னாள் ஆங்கிலத்துறைப் பேராசிரியர். பாலசந்திரன், மடாலய கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் செல்லப்பா, மணிமொழி மோகன், மணிமொழி முருகன், பெற்றோர்கள், ஆசிரியர்கள் பங்குபெற்றனர். விழாவிற்கான ஏற்பாடுகளை உடற்கல்வி ஆசிரியர் சசிக்குமார், என்.எஸ்.எஸ் திட்ட அலுவலர் கருப்பையா ஆகியோர் செய்திருந்தனர்.

03.10.2016 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரித் தமிழ் மன்றத்தின் சார்பில் பட்டிமன்றம் நடைபெற்றது. தமிழ் உதவிப் பேராசிரியர் மு.பழனியம்மாள் நடுவராகப் பொறுப் பேற்றார். கல்லூரி முதல்வர் டாக்டர் பா.செல்லப்பா வாழ்த்துரை வழங்கினார். சோ.நித்திய ராஜேஸ்வரி, சு.பவித்ரா, ப.ஜோதிமணி, ரா.சௌமியா, ச.சுபஸ்ரீ, க.வெண்ணிலா ஆகிய மாணவியர் பங்கேற்றுப் பேசினர்.

தமிழ் உதவிப் பேராசிரியர் டாக்டர் அ.சங்கரதாஸ் வரவேற்ற நிகழ்ச்சியில் மாணவி எஸ்.கிருத்திகா நன்றி கூறினார்.

06.10.2016 அன்று ஆங்கிலத்துறை சார்பில் வினாடி வினாப் போட்டி நிகழ்ந்தது. ஆங்கிலத்துறைப் பேராசிரியர்கள் போட்டியினை நடத்தினார்கள். ஜெயந்த் (III B.Com) இந்திரா (I Maths) சூர்யா (III CS) முதலிடம் பெற்றனர். M.ஜெய்கணேஷ் (I Maths) V.சுபலெட்சுமி (I CS) S.லலிதா (III CS) இரண்டாமிடம் பெற்றனர்.

07.10.16 அன்று அனைத்துக் கல்வி நிறுவனங்களிலும் கலைமகள் வழிபாடு நடைபெற்றது.

07.10.2016 அன்று தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 5ஆம் ஆண்டு குருபூசை விழாவின் முதல்நாள் நிகழ்ச்சி நடைபெற்றது. காலை 9.00 மணி முதல் திருவாசகம் முற்றோதல் நடைபெற்றது. பிற்பகல் 3.00 மணி அளவில் நிறுவனர் நாள் விழாவும் பரிசளிப்பு விழாவும் நிகழ்ந்தன. குருபூசையை முன்னிட்டு நடத்தப்பெற்ற பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் ஆசியுடன் நடைபெற்ற இவ்விழாவில் அறங்காவலர்கள் திரு. கண்ணப்ப செட்டியார், திரு இராமநாதன் செட்டியார் உட்பட ஆலோசகர் டாக்டர் சே.குமரப்பன், கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், பேராசிரியர்கள், அலுவலர்கள், மாணவர்கள் கலந்து கொண்டனர். பல்வேறு பள்ளிகளிலிருந்தும், கல்லூரிகளிலிருந்தும் மாணவர்கள், ஆசிரியர்கள், மாணவர்களின் பெற்றோர்கள் விழாவில் திரளாகக் கலந்து கொண்டனர். கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் மேனிலைப் பள்ளி முதல்வர் திருமதி.மணிமொழிமோகன் அனைவரையும் வரவேற்றார். முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப் பள்ளி முதல்வர் திருமதி மணிமொழி முருகன் நன்றி கூறினார். விழாவில் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு பேராசிரியர் சொ.சொ.மீ.சுந்தரம் பரிசுகள் வழங்கி விழாப் பேருரை ஆற்றினார்.

08.10.2016 அன்று காலை முதல் கைவல்ய நவநீதம் முற்றோதல் நடைபெற்றது. பின்பு நடந்த குருபூசையிலும்

அன்னதானத்திலும் ஏராளமானோர் கலந்து கொண்டு குருவருளும் திருவருளும் பெற்றுச் சிறப்பித்தனர்.

09.10.2016 அன்று குருபூசை விழாவை முன்னிட்டு அன்று 10 மணி முதல் வேதாந்த சத்சங்கம் நடைபெற்றது. மாலை 3.30 மணி அளவில் நூல் வெளியீட்டு விழா நிகழ்ந்தது. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். காப்பியக் கவிஞர் நா.மீனவன் வரவேற்புரை நிகழ்த்தினார். கைவல்ய நவநீதம் இரண்டாவது மாநாட்டு மலர், இரண்டாம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ அருணாச்சல சுவாமிகள் எழுதிய கைவல்ய நவநீதம் உரை, கோவிலூர் குசுமாஞ்சலி என்னும் மூன்று நூல்களையும் சுவாமிகள் வெளியிட முத்தமிழ்ப்பண்ணை அரங்கராசன், திருவாரூர் காத்தப் பெருமாள், பெருவெளி ராமன் என்ற வெங்கட்ராமன் ஆகியோர் நூல்களைப் பெற்றுக் கொண்டனர். விழாவில் சென்னைப் பல்கலைக் கழக மேனாள் தமிழ் மொழித்துறைத் தலைவர் பேராசிரியர் அரங்க இராமலிங்கம் வாழ்த்துரை வழங்கினார். செல்வியர் கவிதா, கவிசித்ரா இறைவணக்கம் பாடினர்.சிறப்பு விருந்தினர்கள் அனைவரும் பொன்னாடை அணிவித்துப் பெருமைப்படுத்தப் பெற்றார்கள். விழாவில் நிறைவாக வேதாந்த மாணவர் நீ.இரவிச்சந்திரன் நன்றி கூறினார்.

03.10.2016 அன்று ஸ்ரீமத் இராமநாத ஞான தேசிகர் குருபூசையும். 08.10.2016 அன்று தெய்வத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகளின் 5ஆம் ஆண்டு குருபூசையும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### புதல்வரைப் பெறுதல்

1. **பெறுமவற்றுள் யாம்அறிவ தில்லை அறிவு அறிந்த**
   **மக்கட்பேறு அல்ல பிற.**

பெறும் அவற்றுள் - ஒருவன் வாழ்க்கையில் பெறுகின்ற எல்லாச் சிறப்புகளுக்குள்ளும்; யாம் அறிவ்தில்லை - யாம் அறிந்த ஒன்று இல்லை; அறிவு அறிந்த - பிறர்க்கு ஒப்புரவு முதலான நல் வினைகளைச் செய்யும் அறிவினை அறிந்த ; மக்கட்பேறு - மக்களைப் பெறுதல் ; அல்ல பிற - அல்லாத பிற.

ஒருவன் தன் வாழ்க்கையில் பெறுகின்ற பொருள் முதலான சிறப்புகளுக்குள் பிறர்க்கு ஒப்புரவு முதலான நல் வினைகள் செய்கின்ற அறிவினை அறிந்த மக்களைப் பெறுதலைவிட மிகச் சிறப்புடைய ஒன்றையாம் அறிந்ததில்லை ; பிற அனைத்தும் சிறப்பு இல்லாதவை.

இதனால் புதல்வரைப் பெறுதலின் சிறப்புக் கூறப்பட்டது.

மக்கள் - ஆண்,பெண் இருபாற் பொதுப் பெயர்

இல்லற வாழ்வை அறநெறியில் நடத்தும் இல்வாழ்வானும் அந்நெறியில் நல்லாற்றின் நிற்கும் துணையாக அமைந்த இல்லாளும் சிறப்புடையவர் ஆதலினால் அவர்கள் பெறும் மக்களும் அறிவறிந்த ஆணாகவும் பெண்ணாகவும் அமைகின்றனர் எனலாம்.

2. எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

எழுபிறப்பும் - தோன்றும் ஏழு பிறவிகளிலும் ; தீயவை - துன்பங்கள்; தீண்டா - அணுக மாட்டா ; பழிபிறங்கா - பழி ஏற்படாத; பண்புடை - நல்ல பண்புகளைக் கொண்ட ; மக்கட் பெறின் - மக்களைப் பெற்றால்.

பிறரால் பழிக்கப்படாத நல்லபண்புகளைக் கொண்ட மக்களைப் பெற்றால் அத்தகைய மக்களைப் பெற்றவர்களின் ஏழு பிறப்புகளிலும் அவர்களைத் துன்பங்கள் அணுகமாட்டா.

எழுபிறப்பு : தேவர், நரகர், மக்கள், விலங்கு, ஊர்வன, பறப்பன, தாவரங்கள்

3. தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்.

தம்பொருள் என்ப - ஒருவர்க்குத் தமது பொருள் என்று சொல்லுவார்கள்; தம்மக்கள் - தம்முடைய மக்களை ; அவர்பொருள் - அவர்களுக்கு உரியதான அப்பொருள் ; தம்தம் வினையான் வரும் - அவரவரும் செய்த வினையால் வரும்.

ஒருவர்க்குத் தமது பொருள் என்று தம்முடைய மக்களையே சொல்லுவார்கள் ; அவருக்குரிய பொருளாகிய மக்கட் பேறும் அவரவர் ஆற்றும் செயல்களாலேயே வரும்.

மக்கள் பேற்றால் அடையும் பேரின்பம் கூறப்பட்டது.

**4. அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ்.**

அமிழ்தினும் - அமிழ்தத்தைவிட ; ஆற்ற இனிதே - மிகவும் இனிமை உடையது ; தம்மக்கள் - தாம் பெற்ற மக்களின் ; சிறுகை - மென்மையான சிறியகை ; அளாவிய - கலைத்த (கலந்த) கூழ் - உணவு.

தாம் பெற்ற மக்களின் மென்மையான சிறிய கையினால் கலக்கப் பெற்ற உணவு அமிழ்தத்தை விட மிகவும் இனிமை உடையது.

அளாவுதல் - உணவில் கைவைத்தும், சிதறியும், தம் வாயில் கவ்வியும் செய்கின்ற கலத்தல். அமிழ்தினும் - உம் உயர்வு சிறப்பு உம்மை;

**5. மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்று அவர்**
**சொல்கேட்டல் இன்பம் செவிக்கு.**

மக்கள்மெய் தீண்டல் - தம்முடைய மக்களின் உடம்பைத் தொட்டுத் தழுவுதல் ; உடற்கின்பம் - பெற்றோரின் உடலுக்கு இன்பம் ; அவர் சொல் கேட்டல் - அந்தமக்கள் பேசும் மழலைச் சொல்லைக் கேட்பது ; இன்பம் செவிக்கு - பெற்றோரின் செவிகளுக்கு இன்பம் ஆகும்.

தாம்பெற்ற மக்களின் உடம்பைத் தொட்டுத் தழுவுதல் பெற்றோரின் உடலுக்கு இன்பம் ; அந்தமக்கள் பேசும் மழலைச் சொல்லைக் கேட்பது பெற்றோரின் செவிக்கு இன்பம் ஆகும்.

**6. குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்**
**மழலைச்சொல் கேளா தவர்.**

குழலினிது - குழல்இசை இனியது ; யாழ்இனிது - யாழிசை இனியது ; என்ப - என்று கூறுவார்கள் ; தம்மக்கள் - தாம்பெற்ற மக்களின் ; மழலைச் சொல் கேளாதவர் - மழலைச் சொற்களைக் கேளாதவர்.

தாம்பெற்ற மக்களின் மழலைச் சொற்களைக் கேளாதவர்கள், குழலிசை இனிது என்றும் யாழிசை இனிது என்றும் கூறுவார்கள்.

குழல், யாழ் என்பன அவற்றிலிருந்து பிறக்கும் இசைக்கு ஆகி வந்ததால் ஆகுபெயர்.

4,5,6 ஆகிய குறள்களால் மக்கட் பேற்றால் அடையும் உடனடி இன்பம் கூறப்பட்டுள்ளது.

7. **தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து**
**முந்தி இருப்பச் செயல்.**

தந்தை மகற்காற்றும் - தந்தை தன் மகனுக்கும் செய்யும்; நன்றி - நன்மை ; அவையத்து - கற்றறிந்த சான்றோர் கூடிய அவையில் ; முந்தி இருப்பச் செயல் - முதன்மையானவனாக இருக்குமாறு கல்வி உடையவனாகச் செய்தல்

ஒரு தந்தை தன்மகனுக்குச் செய்யும் நன்மையான செயல் என்பது கற்றறிந்த சான்றோர் கூடிய அவையில் முதன்மையானவனாக இருக்குமாறு கல்வி உடையவனாகச் செய்தல் ஆகும்.

தந்தையின் கடமை கூறப்பெற்றது.

மகற்காற்றும் - நான்காம் வேற்றுமைத் தொகை.

8. **தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க்கு எல்லாம் இனிது.**

தம்மின் - தம்மைவிட (பெற்ற தந்தையைவிட) தம்மக்கள் - தம்முடைய மக்களின் ; அறிவுடைமை - அறிவுடைமை ; மாநிலத்து - பெரிய இவ்வுலகத்தில் ; மன்னுயிர்க்கு - நிலைத்த உயிர்களுக்கு; எல்லாம் இனிது - எல்லோருக்கும் இனிதாகும்

இந்த உலகத்தில் நிலைபெற்ற உயிர்களாகிய தந்தையர் என்னும் சான்றோர்களுக் கெல்லாம் தம்மைவிடத் தம்முடைய மக்கள் அறிவுடையவராயிருத்தல் இனிமை தரும் ; மகிழ்ச்சி தரும். (தந்தை தன் மகனைத் தன்னைவிடச் சிறந்தவனாக்க வேண்டும்)

உயிர் - ஆகுபெயர் ;

9. **ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்.**

ஈன்ற பொழுதின் - தன்மகனைப் பெற்றெடுத்த பொழுதினைவிட; பெரிதுவக்கும் - மிகுந்த மகிழ்ச்சி அடைவாள் ; தன்மகனை - தான் பெற்ற மகனை ; சான்றோன் எனக்கேட்ட தாய் - அறிவினால் சிறந்தவன் என்று சான்றோர் பாராட்டும் சொல்லைச் செவியினால் கேட்ட தாய்.

தன்மகன் கல்வி அறிவினால் சிறந்தவன் என்று சான்றோர் பாராட்டும் சொல்லைத் தன் செவியால் கேட்கின்ற தாய், அவனைப்-

பெற்றெடுத்த பொழுதில் அடைந்த மகிழ்ச்சியைவிட மிகுந்த மகிழ்ச்சி அடைவாள்.

பொழுதின் - இன் ஐந்தாம் வேற்றுமை உருபு.

10. **மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை**
**என்நோற்றான் கொல்எனும் சொல்.**

மகன் - தாம்பெற்ற மகன் ; தந்தைக்கு ஆற்றும் உதவி - தந்தைக்குச் செய்கின்ற உதவி ; இவன்தந்தை - இவனுடைய தந்தை ; என்நோற்றான் கொல் - இவனைப் பெறுவதற்கு என்ன நன்மை செய்தானோ ; எனும்சொல் - என்னும் பாராட்டுச் சொல்.

அறிவில் சிறந்த இந்த மகனைப் பெறுவதற்கு இவனுடைய தந்தை என்ன நன்மை செய்தானோ என்று சான்றோர் பாராட்டுகின்ற சொல்லைப் பெற்றுத் தருவதுதான் ஒருமகன் தன்னைப் பெற்ற தந்தைக்குச் செய்கின்ற உதவியாகும்.

## அன்புடைமை

### அன்பும் அறனும் உடைய இல்வாழ்க்கையில் அதன் பகுதியான அன்புடைமை

1. **அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும்.**

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் - ஒருவர் கொண்ட அன்பினைப் பிறர் அறியாமல் தடுக்கின்ற தாழ் உள்ளதோ? - ஆர்வலர் - அன்புடையவர் ; புன்கண்நீர் - பிறர் துன்பம் கண்டு சிந்தும் கண்ணீர்த் துளிகள் ; பூசல் தரும் - வெளிப்படுத்தும்.

பிறர்துன்பம் கண்டு அன்புடையார் சிந்தும் கண்ணீர்த் துளிகள் அவர்கொண்ட அன்பினை வெளிப்படுத்தி விடும் ; எனவே ஒருவர் கொண்ட அன்பினை அடைத்துத் தடுக்கும் தாழ்ப்பாள் இல்லை.

கணீர் - கண்ணீர் என்பதன் இடைக்குறை.

2. **அன்பிலார் எல்லாம் தமக்குஉரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு.**

அன்பிலார் - அன்புணர்வு இல்லாதவர்கள் ; எல்லாம் - தாம் கொண்ட எல்லாப் பொருளும் ; தமக்கு உரியர் - தமக்கே உரிமை எனக்

கொள்வர் ; அன்புடையார் - அன்புடையவர்கள் ; என்பும் உரியர்பிறர்க்கு- தம் உடம்பாலும் பிறருக்கு உரியவர்கள்.

அன்புணர்வு இல்லாதவர்கள் தாம் கொண்ட எல்லாப் பொருளும் தமக்கே உரிமை உடையன எனக் கொள்வர்; அன்புடையவர்கள் தம் உடம்பாலும் பிறர்க்கு உரியவராவார்கள்.

என்பு - ஆகுபெயர்.

3. **அன்போடு இயைந்த வழக்கு என்ப ஆருயிர்க்கு**
**என்போடு இயைந்த தொடர்பு.**

ஆருயிர்க்கு - அரிய உயிருக்கு ; என்போடு - உடம்போடு ; இயைந்த தொடர்பு - உண்டான தொடர்பு ; அன்போடு இயைந்த - அன்போடு உண்டான ; வழக்கு என்ப - வழக்கம் என்று கூறுவர்.

அரிய உயிருக்கு உடம்போடு உண்டான தொடர்பு அன்போடு உண்டான வழக்கம் என்று கூறுவர். வழக்கம் என்பதனை அன்போடு நிகழும் நடைமுறையாகிய அறநெறி எனலாம். உயிரும் உடம்பும் இயைந்தாற் போல் அன்பும் அறனும் இயைந்ததாகும்.

4. **அன்பு ஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்**
**நண்பு என்னும் நாடாச் சிறப்பு.**

அன்புஈனும் - ஒருவர் மற்றவரிடத்தில் காட்டும் அன்பானது தரும்; ஆர்வம் உடைமை - அதுபோல் இன்னும் அன்பு செலுத்த வேண்டும் என்னும் விருப்பம் உடைமை ; அது ஈனும் - அந்த விருப்பம் தரும் ; நண்பு என்னும் - நட்பு என்று சொல்லப் பெறும் ; நாடாச் சிறப்பு - எதிர்பாராத சிறப்பினை ;

ஒருவர் மற்றவரிடத்தில் காட்டும் அன்பு என்பது இன்னும் பலரிடத்தில் அன்பு செலுத்த வேண்டும் என்னும் விருப்பத்தைத் தரும் ; அந்த விருப்பம் நட்பு என்னும் எதிர்பாராத சிறப்பினைத் தரும்.

அன்பு செய்யச் செய்ய நட்புப் பெருகும்.

5. **அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து**
**இன்புற்றார் எய்தும் சிறப்பு.**

அன்புற்று - வாழ்க்கையில் கணவனும் மனைவியும் அன்புகொண்டு ; அமர்ந்த வழக்கு - பொருந்தி வாழ்கின்ற இல்லற நெறியின் பயன் என்ப - என்று சொல்லுவர் ; வையகத்து - இவ்வுலகத்தில் ; இன்புற்றார் - இல்லற நெறிக்கண் நின்று மகிழ்ந்தவர்கள் ; எய்தும் சிறப்பு - பெறுகின்ற சிறப்பு.

இவ்வுலகத்தில் இல்லற நெறிக்கண் நின்று மகிழ்ந்தவர்கள் பெறுகின்ற சிறப்பினை, இல்வாழ்க்கையில் கணவனும் மனைவியும் அன்பு கொண்டு பொருந்தி வாழகின்ற இல்லற நெறியின் பயன் என்று சொல்லுவர்.

**6. அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை.**

அறத்திற்கே - அறம் செய்வதற்கு மட்டுமே ; அன்புசார்பு என்ப - அன்பு துணையாகும் என்று சொல்லுவர் ; அறியார் - அறியாதவர்கள் ; மறத்திற்கும் - வீரத்திற்கும் ; அஃதே துணை - அன்புதான் துணை.

அறம் செய்வதற்கு மட்டுமே அன்பு துணையாகும் என்று அறியாதவர்கள் சொல்லுவார்கள் ; பிறர் பகைமை நீக்கும் வீரத்திற்கும் அன்புதான் துணையாகும்.

அறத்திற்கே - ஏகாரம் பிரிநிலை

**7. என்பிலதனை வெயில்போலக் காயுமே**
**அன்பி லதனை அறம்.**

என்பிலதனை - எலும்பில்லாத உயிரினங்களை ; வெயில் போல - வெயிலைப்போல ; காயுமே - துன்புறுத்தும் ; அன்பிலதனை - அன்பில்லாத உயிர்களை ; அறம் - அறமாகிய கடவுள்.

எலும்பில்லாத உயிரினங்களின் உடல்களை வெயில் பட்ட அளவில் துன்புறுத்தும் ; அதுபோல அன்பில்லாத உயிரினங்களாகிய மனிதர்களை அறம் என்னும் கடவுள் துன்புறுத்தும்.

**8. அன்பு அகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரம்தளிர்த் தற்று.**

அன்புஅகத்து இல்லா - மனத்தில் அன்பு இல்லாத ; உயிர் வாழ்க்கை - உயிரோடு வாழ்வதாகக் கொள்ளும் இல்லற வாழ்க்கை ; வன்பாற்கண் - வன்மையான வறண்ட நிலத்தின்கண் ; வற்றல் மரம் - காய்ந்தமரம் ; தளிர்த்தற்று - தளிர்ப்பது போலாகும்.

வன்மையான வறண்ட நிலத்தில் காய்ந்தமரம் தளிர்க்க மாட்டாது ; அதுபோல மனத்தில் அன்பில்லாமல் உயிரோடு வாழ்கின்ற இல்லற வாழ்க்கையும் தளிர்க்காது.

உயிர்வாழ்க்கை - ஒடு மூன்றாம் வேற்றுமை உருபு தொக்கது

**9. புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாக்கை**
**அகத்துறுப்பு அன்பி லவர்க்கு.**

புறத்துறுப்பு எல்லாம் - உடம்பின் வெளியில் உள்ள உறுப்புகள் எல்லாம் ; எவன் செய்யும் - என்ன பயனைத்தரும் ; யாக்கை - உடம்பில் ; அகத்துறுப்பு - மனம் என்னும் உறுப்பில்; அன்பிலவர்க்கு - அன்பில்லாதவர்களுக்கு.

மனம் என்னும் உறுப்பில் அன்பில்லாதவர்களுக்கு உடம்பின் வெளியே தெரியும் உறுப்புக்கள் எல்லாம் என்ன பயனைத் தரும். பயனில்லை என்பதாம்.

**10. அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு.**

அன்பின் வழியது - அன்பு செய்தலின் வழி நிற்பது ; உயிர்நிலை - உயிர்நிலை பெற்றுள்ள உடம்பாகும் ; அஃதிலார்க்கு - அன்பு இல்லாதார்க்கு ; என்புதோல் போர்த்த உடம்பு - எலும்பைத் தோலால் போர்த்திய உடம்பு.

அன்பு செய்தலின் வழி நிற்பதுதான் உயிர்நிலை பெற்றுள்ள உடம்பாகும் ; அன்பு இல்லாதவரின் உடம்பு எலும்பினைத் தோலால் போர்த்திய வெறும் உடம்பாகும்.

என்பு தோல் போர்த்த - இரண்டு, மூன்றாம் வேற்றுமை உருபுகள் தொக்கன.

*(தொடரும்...)*



## மூத்த தமிழறிஞர் ஆறு. அழகப்பனின் எண்பதாம் அகவை முத்து விழா!

மூத்த தமிழறிஞரும் பேராசிரியருமான ஆறு. அழகப்பனின் எண்பதாம் அகவை முத்து விழா ஆத்தங்குடியில் ஆகஸ்ட் 14, 15 தேதிகளில் சிறப்பாக நடைபெற்றது. இந்திய நதிகள் இணைப்புத்திட்டத்திற்கு முன்னோடிக் குறியீடாகக் காசியிலிருந்து ராமேஸ்வரம் வரையில் உள்ள நதிகள், அருவிகள், சுனைகள் அடங்கிய புனித நீர் 80 குடங்களில் நிரப்பப்பட்டுக் கலசங்களுக்குத் தமிழ் மந்திரங்கள் முழங்கத் தமிழ் வேள்வி நடத்தப்பெற்றது. சாது சண்முக அடிகள் தொடங்கி வைத்தார். சங்கர நாராயணன் வேள்வியை நடத்தினார். இரண்டாம் நாள் வேள்வியைப் பேரூர் ஆதீனம் மருதாசலஅடிகள் தொடங்கி வைத்தார். கும்பங்களில் உள்ள புனிதநீரால் ஆறு அழகப்பனுக்கு நீராடல் நடைபெற்றது. துறையூர் ஆதீனம் ரத்தினவேலாயுத சிவப்பிரகாச சுவாமிகள், புதுக்கோட்டை திலகவதியார் ஆதீனம், மற்றும் உற்றார் உறவினர்கள் அரசியல் பிரமுகர்கள், நண்பர்கள் ஆகியோர் கலசநீரால் புனிதநீராட்டினார். விழாவில் ராஜாசர் முத்தையா செட்டியார், ரோஜா முத்தையா மற்றும் ஆறு. அழகப்பனின் பெற்றோர் ஆகியோரின் திருஉருவப் படங்களை ஜஸ்டிஸ் டாக்டர் ஏஆர்.லெட்சுமணன் திறந்து வைத்தார். மற்றும் சாமி திராவிடமணி அரு.நாகப்பன், ராம.ராமநாதன் செட்டியார் சோம.திருநாவுக்கரசு செட்டியார் ஆகியோர் பங்கேற்றனர்.

முத்து விழா நாயகர் ஆறு.அழகப்பன் தொகுத்த தாலாட்டுப்பாடல்கள், ஆத்தங்குடி சிறப்புகள் மற்றும் முத்துவிழா மலர் நூல்களை ஜஸ்டிஸ் டாக்டர் ஏஆர்.லெட்சுமணன் வெயியிட்டார். அறுபடை முருகன் உருவப்படங்களை சண்முகம் சுவாமிகள் வெளியிட்டார். ஆத்தங்குடி கோவில் கும்பாபிஷேகப் பணிக்காக ஆறு.அழகப்பன் 50 ஆயிரம் ரூபாய் அறக்கொடையை முன்னாள் அமைச்சர் கேஆர்.பெரியகருப்பன் மூலம் சந்திரசேகரிடம் அளித்தார். ஆறு.அழகப்பன் சார்பில் தமிழறிஞர் சண்முகசுந்தரத்திற்குப் பொற்கிழியைப் பெருங்கவிக்கோ சேதுராமன் வழங்கினார். விழாவில் தமிழர் தேசிய இயக்கத்தலைவர் பழ.நெடுமாறன், நெற்றிக் கண் ஆசிரியர் எஸ்.மணி, நா.பழனியப்பன், கவிஞர் சோலைநாதன், டாக்டர் சுபாஷ், எழுத்தாளர் லேனா தமிழ்வாணன், புலவர் சுந்தரராஜன், இளங்கோவன் ஆகியோர் உரையாற்றினர். திண்டிவனம் கேட்டவராயர், வில்லுப்பாட்டின் மூலம் ஆறு.அழகப்பனின் வாழ்க்கை வரலாற்றைப் பாடலாகப் பாடி மகிழ்வித்தார்.

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94435 02017

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

**B.A., Tamil**
**B.A., English**
**B.Com.,**
**B.Com.(C.A).,**
**B.B.A.,**
**B.Sc., Maths**
**B.Sc., Computer Science**
**B.Sc., Visual Communication**
**B.Sc., Physical Education**

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!

**B.Sc. Visual Communication.,**

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)